உ

கணபதி துணை.

முருகன் றுணை.

---

# செந்திலாண்டவன் கீர்த்தனை

---

மதுரை - புதுக்குயவர்பாளையம்

மகா-ள-ள-ஸ்ரீ - பூச்சன் செட்டியாரவர்கள் குமாரன்

மாரியப்பனால்

இயற்றப்பட்டது.

---

சென்னிமலை - க. த. கிருஷ்ணைய செட்டியார்

அவர்கள் குமாரர்

த. தேவேந்திரன் செட்டியாரவர்களின்

பொருளுதவியால்


சென்னை : சாது அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| இதன் விலை அணா நாலு | முதற் பதிப்பு. 1925 | காப்பி. 1000 |

உ

# சாற்றுக்கவி.

---

திருநெல்வேலி தெற்குப் புதுத்தெரு

## நாராயணக்கவிராஜர் அவர்கள் இயற்றிய

### அறுசீரடிவிருத்தம்.

செந்தமிழின் மணங்கமழும் பாண்டிநா டெனப்புகலுஞ்
சேயி ழைக்கோர்
சுந்தரமா வதனமெனப் பொலிவுதரு மதுரையெனுந்
தொல்ப திக்கண்
நந்தலில்வேட் கோவர்மர பினிலன்னோர் முனம்புரிந்த
நற்ற வத்தால்
வந்துதித்தோ னறிஞர்குழாஞ் சிரமேற்கொண் டாடுபுகழ்
வாய்ந்து நின்றோன். (க)

ஓதருநற் குணங்களெலா மொருங்கேவந் துறைதரற்கோ
ருறையு ளாகிப்
பேதமையா மிருட்படல மிரிதரநற் சுவாநுபவம்
பிறங்கு மாற்றாற்
போதவரு ணோதயமுண் டாய்த்தனது மரபின்முனம்
புலமை சான்ற
தீதிலா நீலகண்டர் போலிளமை துறந்தமனச்
செம்மை பூண்டோன். (உ)

அஞ்சுதலை யொழித்தன்பர்க் காறுதலை யுறுமாறின்
　　னருள்சு ரக்கும்
கஞ்சுமிழ்வேற் குகனூர்வம் பொங்கவவன் குணம்பாடா
　　நாவி ருக்கென்
வஞ்சவுரை யாடுதற்கோ வெனக்கருதித் துணிவுகொடு
　　வாளி னீக்க
மிஞ்சுமகி மைச்செந்தி லாண்டவன்றன் றிருவருளான்
　　மீண்டும் பெற்று. (௩)

அப்பெருமான் பதத்தின்ப வாரிநீர் மாந்தியுய
　　ரன்பு கூர்ந்து
வெப்புவினைக் கோடையினை யுமுயிர்ப் பயிர்க்குறுதி
　　விளைப்பா னெண்ணி
செப்பருநற் கீர்த்திதரு கீர்த்தனமா மாரிதனைச்
　　சிந்தி மாரி
யப்பனெனும் பெயர்க்கிலக்காய் நின்றானப் பெருமைதனை
　　யறையற் பாற்றே. (௪)

---

அம்பாசமுத்திரந்தாலுகா வடக்குக் காராகுறிச்சி

அடுக்குமொழி

## பி. ஆவுடையப்ப செட்டியாரியற்றிய

நொண்டிச்சிந்து.

௧ அன்பரே கேட்பீரே—மாரி
யப்பன்செய் தியைச்சற்றே செப்பிடுவேன்
கும்பலாய் நரியினத்தை—யீசன்
குதிரையாய்க் கொண்டுபோன மதுரையிலே

உ வயல்மணப் பலவளமும்—சிறந்து
வாழும் புதுக்குயவர் பாளையமாம்
நயமிகும் வீதியிலே—என்றும்
நலத்தைச் செயுங்குயவர் குலத்தோங்கும்

௩ நாதன் பூச்சன் செட்டியார்—தவ
நற்பயனால் மாரி யப்ப னென்போன்
நீதமுட னுதித்து—வெகு
நேர்த்தி யாகவளர்ந்து கீர்த்திதரும்

௪ நன்மதிக் கலைபயின்று—அறிவாய்
நயமுற்ற பதினெட்டு வயதினிலே
முன்வினை யால்மதுரை விட்டு
மோகமாய் நாடக சேகரனாய்

௫ தினந்தினம் புகழோங்கும்—திருச்
செந்திலம் பதியிலே வந்தவுடன்
வனப்புள்ள பொருள் காணு—தேங்கி
வருந்திப் பசிக்கமுதம் அருந்தாமல்

௬ திரும்பி யம்மா பேட்டை—சென்று
தேவியா மாகாளி கோயி லண்டை
விரும்பியோர் கத்திகொண்டு—மனது
வெறுத்துத் தனதுநாவை யறுத்தயர்ந்து

எ பெருமான் திருவருளால்—உயிர்
பிழைத்து விடிந்தபின்பு விழித்தெழுந்து
பொருள்மிகுந் திருச்செந்தூர்—வந்து
புண்ய முறச்சுப்ர மண்யனிரு

அ திருவடி சதமெனவே—கடல்
தீர்த்தங்க ளாடி யெதார்த்த மனம்
உருகிடு நினைவு கொண்டு—இந்த
வுலகமெல் லாங்கீர்த்தி யிலகிடவே

௯ விந்தையா யிருவருஷம்—வரை
வேல்பிடித் தோனருட் பால்குடித்துச்
சந்தோஷ மாகக்குகன்—சன்னி
தானத்தி லேகற்றி யானத்துடன்

௧௦ க்ஷேமம் பெருகவிருந்து—கந்தன்
தெரிசனம் செய்து மூன்று வருஷஞ்செல்ல
ஊமையாய்ச் சரணடைந்து—சிந்தை
யுருகிய நற்குமர குருபரற்கு

௧௧ முன்னருள் செய்த விதம்—போல
மோசமுற்ற நாவும் பேசும்படி
பன்னிரு கரப்பெருமான்—அருள்
பண்ணினதால் முன்பு புண்ணிசைந்த

௧௨ கொன்ன லுடைய நாவும்—இசைக்
கொழுந்துரை மொழிந்திட வளர்ந்ததுவே
பின்னெம தாண்டவன்மேல்—சிந்தை
பிரிந்திடாத் தோத்திரம் புரிந்துகந்து

௧௩ நன்னய மிகச்சேரும்—கீதம்
நாடிடுங் கீர்த்தனை பாடிக்கொண்டு
இன்னிசைப் பஜனம் பண்ணி—அன்போ
டிருந்து நோன்பு முற்றும் பொருந்திடமேல்

௧௪ மேவடியார் கூடி—வணங்கும்
பூவடி வாமிரு சேவடிக்கு
காவடி தனைச்செலுத்தி—அலங்
காரம துங்களி கூருங்குகன்

௧௫ நேசமாம் அர்ச்சனையும்—வேத
நேமமு யர்ந்தபி ராமணர்க்குப்
போஜன மிகவுமிட்டுச்—சந்தப்
பொருப்பினி லிருப்பவன் திருப்பதத்தைக்

கசு கருத்துளத் துதித்து நின்று—கந்தன்
கருணை பெற்ற பக்தன் பெருமையெல்லாம்
உரைத்திட நான் தரமோ—என்றும்
உண்மைக் குவந்திடு ஷண்முகன்மேற்
கஎ கீத மிகுந்து பாடும்—அருட்
கீர்த்தனைபோ லெங்கும் பார்த்ததில்லை
யாதலா லுணர்ந்தமட்டும்—உள்ள
ஆசையுடன் சொன்னேன் நேசமதாய். (அன்பரே)

---

உ

கணபதி துணை.

# செந்திலாண்டவன் கீர்த்தனை.

---

## காப்பு

தேன்மொ ழிக்குற வள்ளிதெய் வானையின்
கோன வர்துதி செய்து நலம்பெற
ஞான மேவுரு வாகிய நாயகன்
ஆனை மாமுக வன்கழல் போற்றுவாம்.

---

இராகம் - கலியாணி.] [தாளம் - ஆதி.

### பல்லவி

ஞானவிக்னேசா வந்தருள்செய் நம்பினே னுன்னை (ஞா)

### அநுபல்லவி

வானோர் புகழ்ஷண்முக ஞான குகன்றுணைவா
யானுனை மனனஞ்செய் - தேன் எனதகமதில் (ஞா)

### சரணம்

மோன குருவாய் நால்வர்க் - கானபொருளருள் கோ
மானவர் மகவெனும் - ஆனைமுகப் பொருளே
முக்கிய மூவர்களுக்கு - முதலென
பக்தர்மனத்து ளிருத்திய பாதமே
மோதகப்ரிய - ஞானஉத்தம
னேவுனைத் தொழுதேன் - எனக்கினி (ஞா)

இராகம் - இந்துஸ்தான் தோடி.] [தாளம் - தேசாதி.

## பல்லவி

வரத சுந்தர விநாயகனே - வந்தருள் செய்வாய் கஜமுகனே

## அநுபல்லவி

சுரர் தினம் போற்றுந் தாயகனே - துணைசெயும்
துதி செய்தேன் சுகனே (வரத)

## தொகையறு

பிரணவஸ்ரூபனே பரமனும் சொக்கேசர்
பெற்றநற் பிரதாபனே
சரணமென் போர்க்குதவும் சற்சனப்ரியனே
சகலலோகாதி ஈசனே

(ஷ தொடர்)

சந்ததம் நின்பதச் சேவை தந்திட
தமிய னேன் தேவை
செந்தமிழ்ச் சந்தமொடு கோவை
செப்பிடச் செய்தருள் நாவை (வரத)

## தொகையறு

சிந்தை கனிவோடுனக் கன்புசெய் விதமதும்
சிறுவன்றியே னையனே - எந்தவித மாணும்
நின்கருணை யாலென்னை யீடேற்றுவாய் மெய்யனே
வல்லபை மனமகிழ் நாதா - மாதவர்
வசமுறும் போதா
பல்கலை ஞானநன் னீதா - பரமுமாம்
பகவனே வேதா (வரத)

## கு ரு ஸ் து தி.

இராகம் - பரசு.] [தாளம் - ஆதி.

### பல்லவி

உம்பர் போற்றும் பொற்பாதா - லோபாமுத்திரை
யம்பிகை மகிழும் நாதா - நின்சரண் பணிந்தேன் நீதா (உம்)

### அநுபல்லவி

நம்பினோர்க் கருளுஞ்சிவ சம்புவி னன்பனே - திரு
அம்பைமா நகரிற் றமிழ்க்கும் பதியெனவும் - வளர்
அத்தனே வா - உன்னை - நத்திடும் நான்
இன்பு றத்தடை யேனுரை. (உம்பர்)

அம்புவி தழைக்க வெனவே - உருவெடுத்த
நின்பெருந் தன்மை யறிந்து
வந்தடைந்தேன் சம்ப்ரமனே. (அம்பு)

கம்பர்முத லானபல - கவிவாண ரும்பரவுந்
தென்பொதிகைக் குன்றமர்ந்து
சந்தத மன்பர்க் கருளுந் - திருவே வா
தேவ - தருவே வா - நலந்தரவே வா - வான். (உம்பர்)

---

இராகம் - சக்ரவாகம்.] [தாளம் - ரூபகம்.

### பல்லவி

ஓம் - சரவணபவனே—உத்தம குணதிபனே (ஓம்)

### அநுபல்லவி

ஆம்வழி யெனக்கருளே—வுன
தடைக்கலம் புகுந்தே னற்பொருளே (ஓம்)

சரணம்

சரணமென் றுன்னை யடைந்த பேர்க்குச்
சகல சுகமுந் தருங்கு கேசா
மரண ஜெனன மெனும் பிணியற
மார்க்க மேதுரை நேசா
திரணமென விவ்வுலகை யெண்ணிடச்
செய்த என்பவ நாசா
* கரணமூன்றும் நின்கை வசமதே
காலனை யுதைத்தோர்க் குபதேசா
காக்கவும் நின்பத மெனைச்
சேர்க்கவுந் தகு மமரர்கள்
பார்க்கவும் நடமது கொளே
தார்த்தனே ஜய ஜய வென
ஆர்த்திடும் வாரிதி யோரம தாம்வரை
மீதினிலே - வாய்த்த தெனமாமறை
யோதிட வாழ்நிதியே யெனையாள். (ஓம்)

---

இராகம் - கல்யாணி.] [தாளம் - ரூபகம்.

பல்லவி

கருணாகரனே முருகாகுகா கார்த்திகேயனே ஷண்முகா (கரு)

அநுபல்லவி

அருணடி யுன்னிரு தாள்தொழும்
அடியேனக மகிழும்படி
வடிவேலொடு வரவும்படி (கருண)

சரணம்

முருகா வெனப் பெரியோய் உனை
இருகாலுங் கும்பிடு வே னெனை

---

* மனம்—வாக்கு—காயம்.

திருவா யிரு வாதனை யற்ற
வுருவாய் வருமுனை யேபற்ற
வுத்தம லக்ஷண முற்றவெ
னத்தனு னைத்தவி ரப்பல
வூர் தேடினும் நேரேவழி
யார்தா மருள் வார்மாதவ
மோன சுக் ஞான நற்றி
யான ஸ்ரீதின (கருணை)

---

இராகம் - கல்யாணி.] [தாளம் - ரூபகம்.

பல்லவி

ஷண்முக குகனே - நின்
தாள்பணிந்தேன் - ஆண்டிடும்பால (ஷண்)

அநுபல்லவி

மண்பொன் னெனவும் மாமோக
மங்கையர்க ளாலுங் கெட்டுப்
புண்பட விடலாமோ சொல்
போதனே நன் னீதனே ஞான (ஷண்)

சரணம்

அன்னை தந்தை யுன்னையன்றி
யாருமில்லை யென்று நம்பி
பொன்னடி வணங்கு மென்னைப்
போதும் இதுவரை செய்த
சோதனை குருபர (ஷண்)

அந்தரர்கள் தந்துயரம்
அகற்றிடவென வுலகில்

வந்தவதரித் தவனே
வா - வரமது தரவென
வே - சரவண பவதிரு (ஷண்)

சந்ததமு முன்றுதிசெய்
சிந்தையருடன் கலந்தே
மைந்தனுன் மனமகிழும்
மதியளி யிதுததி பெறபர
கதிபுகழ்மக - பதிபணி சிவ (ஷண்)

---

இராகம் - சங்கராபரணம்] [தாளம் - ஆதி.

பல்லவி

வரத ஷண்முக குகனே
வரு வாய் - முருகனே (வரத)

அநுபல்லவி

பரிதாப நிலை தவிர்ப்
பவருனை யன்றி யெவர் (வரத)

சரணம்

விரதம் பலபுரிந்தும் மெலிந்தேனது தெரிந்தும்
மிகவும் சோதனை செயும் வினைய மெதுவோவுயும்
திரமதுவும் நீயே சேயனுக்கருள் தாயே
தீனரக்ஷகபர மோன சற்குருஹர (வரத)

இராகம் - பிலகரி] [தாளம் - ரூபகம்

பல்லவி

செந்தில் நாயகமே
சேயனென் பணிந்தேன் வா விகமே - திருச் (செந்)

அநுபல்லவி

இந்தா வென்றுந்தன் பொன்தாளெந்த
னகந்தா அந்தா - திருச் (செந்)

சரணம்

பந்த பாசந்தனில் நைந்துழ லுமிந்த
மைந்தன் கரையேற எந்தவழி கூறும்
பாலா மாவநு கூலா வானோர்க்கு
மேலா வேலா - திருச் (செந்)

கடலலை சத்தநின் காதுமடைத்ததா
கண்ணு கிலுமுனக் கென்னதெரியாதா
கர்த்தா வெனக்குரைத் தாலதை
மறுத்தா கூறுவன் - திருச் (செ)

தந்தையிடங்கனிக் காகநீ வாதாடித்
தமைய னெதிரியாய்த் தாணி யெல்லாமோடி
வந்தாய் மனது நொந்தாய் பழநிக்
கந்தா - வந்தருள் - திருச் (செ).

நித்த நித்தமும் பன்னீ ரத்தரும் பூசியே
உத்தம நீயிருக்கத் தான்வருந் தமோ
அத்தனேபரி சுத்தனே காவா
ரத்தினேன் - திருச் (செ)

இராகம் - வசந்தா.] [தாளம் - ஆதி.

பல்லவி

பாதமதை யென்கை வசந்தா - பார்பதி புத்ரா (பாத)

அநுபல்லவி

நாதனே நடனனருள் நீதனே - சிறுவனிடம்
சாதனை செய்யாதுமன - வேதனை தீர்
எந்தன் மன வேதனை தீர் - மைந்தன்மன
வேதனை தீர்த்து உந்தன் (பாத)

உந்தனை யனுதினமும் சிந்தனை செய்தே யிருக்கும்
எந்தனைக் கண்ணோக்கி யென
தந்தனே வா - சிவன்மைந்தனே வா
அருட் கந்தனேவா - வந்து உந்தன் (பாத)

காமுறுவ னுனது நாமமதை யேதொழுது
தாமுருகி வாடுகிறேன் - வா - முருகா
வரந் தாமுருகா - திருமால்மருகா - வந்து உந்தன் (பாத)

எத்தனை நேரமா மிந்தப் பித்தனை யாதரித்திட
கர்த்தனே கவலை நீக்கும்
அத்தனேவா - பரி சுத்தனேவா
என்ன கத்தனே வா - வந்து உந்தன் (பாத)

---

இராகம் - தோடி.] [தாளம் - ரூபகம்.

பல்லவி

ஞானக்கட லோரனே - உன்னை
நாடிவந்தே னென்னைக் காவுபகாரனே (ஞா)

### அநுபல்லவி

ஞானதயாளத் திருச்செந்தூர் மேலோனே
தேன்மொழியாள் குறவள்ளி மணாளனே
தீவினைநீக்கும் பொருளே வந்தாளெனை
சித்தனே முத்தனே கர்த்தனே
நத்தினேன் பித்தனைக் காத்தருள் (ஞா)

### பல்லவி

இரவும் பக லுன்னையே - இந்த
ஏழைநினைந் துருகிறேன் காவென்னையே (இர)

### அநுபல்லவி

பரவும் பராசக்திப் பாலப் பெருமானே
வரமுந் தரக்கத்தி வாவென் றழைத்தேனே
புரமெரித் தோர்க்கு ப்ரணவமுரைத் தோனே
போக னேமயில் வாகனே சுக
யோகனே பாலபி ஷேகனே (ஞா)

### பல்லவி

எப்போ மனம் வருமோ - உந்தன்
பொற்பாதத் தைத்தர சுப்ரமண்யா வுனக் (செ)

### அநுபல்லவி

செப்புந்திருக் குன்றங்கள் வாழ்முருகனே
சேஷசயனத் திருமால் மருகனே
பற்பல சிந்தனையா னைந்திடாதெனைப்
பாலனே வடிவேலனே மறை
மூலனே ஆள் திருக்கோலனே (ஞா)

இராகம் - பியாகடை] [தாளம் - ஆதி.

## பல்லவி

பக்த ஜனப் பிரியனே பரமானந்த (பக்)

## அநுபல்லவி

முத்தியெனுமார்க் கத்தையறிந்துள
மோனர்களும்நற்றி யானர்களுமான (பக்)

## சரணம்

இத்தாரணியி லுதித்தமுதலிருந்
தத்தனுனைமற வாமலும் அறஞ்செய்
சத்யந்தவறிடா தெத்திசையும்புகழ்
சாந்தர்களும் ஏகாந்தர்களுமான (பக்)

சிந்தைகவருமட ந்தையரிடத்தே
சேர்ந்தும்பலவிதம் சோர்ந்தும் இழிவுறும்
பந்தவினையறுத் தெந்தையுனையெதிர்
பார்ப்பவருந்துயர் தீர்ப்பவருமான (பக்)

அல்லும் பகலுமுன் னடியே நினைந்துநின்
றுடியும் பாடியும் அழுது கண்ணீர்பெருகி
வல்லோயுனைத் தொழும் நல்லோர்க் கடிமைசெய்
மதியே ஞானநன் னிதியே யெனக்கருள் (பக்)

சூரனே அவுணர்கள் தொலையும்படி ஜெயித்
துடனே அமரர்கள் துயர்தீர்த்தாண்டவா
அரியோடயன் முதல் அரனும் பணிந்திட
அத்தனெனத் திருச் செந்திலமர்ந்தருள் (பக்)

இராகம் - பைரவி.] [தாளம் - ரூபகம்.

## பல்லவி

சீரலைவா யமர்வோனே - உன்னைத்
தேடிவந்தேன் குமரோனே - திருச் (சீர)

திரிபுர மெரிசெய்த அரனருள்
சரவண குருபர னெனும் - திருச் (சீர)

சித்ரமணிப் பொற்கடக
மிட்டுமே ஜொலிக்குந் - திருச் (சீர)

செப்புமத் தினைப்புனக்கு
றப்பெணைச் சுகிக்குந் - திருச் (சீர)

சித்தமுனைத் தினம் *நத்தியே
பத்திமிகுக்க வருள் - திருச் (சீர)

## அநுபல்லவி

பார்வதி பாதச் சிலம்பினில் வீர
பாகுவெனு மூர்த்தியுந் தம்பி மாரும்
சேரப் பிறந்துனைச் சூழ்ந்து கொண்டாட
தேவர் நிதம்பணிந் தேபுகழ்பாட
தீரத்துடனே வுற்றமர் சூர்பட்டிட வேல்விட்டவ
சேவற்கொடி யோடிச் சிறியேனுக்கருள் வானற்றிருச்(சீ)

## சரணம்

வாரண முகத்தையற் கிளையோனே
வாடா தென்னைவந் தாளுங் கோமானே
தாரணி யையளந் தோன்மரு கோனே
சர்வதபாபர ஞான ஸ்ரீ மானே

---

*நத்திய = விரும்பிய.

தவஞ்செயும் அடியவரிடர் - தொலைந்தி
டும்படி கதிதர - ஜெயம் ஜெயம் ஜெயமென
தின - முழங்கிடு மொலிமிகு - திருச் (சீரலை)

---

இராகம் - நாதநாமக்கிரியை.] [தாளம் - ரூபகம்.

பல்லவி

வருத்தந்தீரையா உந்தன்
மலரடிதொழுதேன் மைந்தனெந்தன் (வரு)

அநுபல்லவி

கருத்துக்கிசைந்தபடி யலைந்துநான்
கதியில்லாம லுன்னடி பணிந்தவென் (வரு)

சரணம்

பெருத்த விப்புவிதனிற் பிறப்பெனும்
பெருஞ் சமுத்திரமதை விலக்கியே
ஒருத்தனைய் நின்றவுனை யிடைவிடா
துருகிடவகை யறியாத வெந்தன் (வரு)

உமைக் குமர குருபர னுக்கருள்
உத்தம நீயளித்த துண்மை யல்லவோ
தாமத மேனிந்த வேழையிட மட்டும்
சர்வா பீஷ்டமுந் தந்துரக்ஷித் தெந்தன் (வரு)

இராகம் - இந்துஸ்தானி தோடி.

பல்லவி

செந்தூர்வளர் கந்தநாதனை சேயனைக் கா வா (செந்)

அநுபல்லவி

உந்தனை யெந்தநேரமும் சிந்தனை செய்தே யிருக்கும்
மைந்தனைக் கண்பாருமே பாருமே பாருமே (செந்)

ஞானக்கடலோரனே நம்பினோர்க்குபகாரனே
மோன குருநாதனே நாதனே நாதனே (செந்)

எப்போதுன்மன திரங்கும்
சுப்ரமண்யனே வணங்கும்
பொற்பதத் தடிமை மாரி
யப்பனுக் கருளுந் - திருச் (செந்)

---

இராகம் - பியாகு.] [தாளம் - ஆதி.

பல்லவி

அற்புத சிங்காரன் - செந்தில்
அண்ணல் தருங்காக்ஷியே (அற்)

அண்ணல் தருங்காக்ஷியே நமை
அடிமை கொள்ளுஞ் சூட்சியே (அற்)

அநுபல்லவி

நற்புகழ் பெறுஞ்செயந்தி
நகர்வலம் வருந்தரு
ணத்திலென் மனங்கவர்புன்
னகைபுரிந்தா ரென்சொல்வேன் (அற்)

சரணம்

தஞ்சமென்றடி பணிந்தோர்
சஞ்சல மகற்றிடவே
விஞ்சையோன் கரமீராறி
லஞ்சலென்றுருகரங்கொள் (அற்)

அண்டர்மகிழ அவுணர்
கொண்டமத மேயொடுங்க
சண்டையிட்டயில் வேல்கொள் - சி
கண்டியோ னெனும் ஷண்முக (அற்)

உற்றவர்க்கென தெழிலை
முற்றிலுந் தீவினையயர்ந்
தற்றிடும்படி யருள்செய்
நற்றவனுனே யெனவே (அற்)

---

இராகம் - ஆனந்தபைரவி] [தாளம் - ஆதி

கண்ணிகள்

செந்தூர்வளர் கந்தா - நான்
உன்றாள் பணிந்தேன் வந்தாள் (திருச்)
சேயனுன் பணிந்து நிற்க
யாதுமறி யாதவர் போ
லிருந்தா - யது பொருந்தா

சின்னஞ் சிறுபாலன் - செய்த
என்னபிழை யானும் - அதைச்
சீர்திருத்தி யெந்தன்மனம்
யாதும் வருத்தமில்லாது
ஆளே - வடி - வேளே

அன்னை தந்தைமார்கள் - அவ
ரின்னதென் றறியார்கள்
ஆதலாலவர் தமக்கிப்
போது தெரியாமல் நாவை
பிந்தா - வென்று - தந்தாள்

உன்னைத் தவிர்த்தேது - கலி
யுகத்தில் தெய்வ மோது
உத்தம பக்திமான் றன்
சித்தம்போல் வரமளிக்கும்
அய்யா - முருகையா - உள்ளம்
நொய்யா - தருள் - மெய்யா

அப்பனே திருப்பரங்கிரி
சுப்ரமண்யனே தொழுமாரி
யப்பனை யாதரி - திருச் (செந்)

---

இராகம் - இந்துஸ்தானி தோடி.

**கண்ணிகள்.**

செந்தூரிடம் நின்றுமனம் நாடு - அங்கு
சென்றுவினை வென்றுமதி நன்று வழிதேடு (செந்)

கந்தவரை வந்தகுக நாதன் - நங்
காதலெது வோவதற் குகந்த ஜெக போதன் (கந்)

எங்கும்புகழ் தங்குங் கடலோரன் - அந்த
ஈசன்மக னுனமுரு கேசனுபகாரன் (எங்)

மங்கையிரு வர்க்குகந்த நேசன் - இந்த
மாநில மெலாம்புகழ வீசும் பிரகாசன் (மங்)

சுந்தரநிறைந்த மகா தீரன் - சிவ
சுப்ரமண்ய ஞானகன வுக்ர மயில்வீரன் (சுந்)

அந்தகனண் டாவரச னிடமே - நம
தச்சமகல அவர்த னிச்சைகொள் மானிடமே. (செந்)

---

இராகம் - இந்துஸ்தானி பியாகு.] [தாளம் - ஆதி.

வானவர் போற்றுஞ் செந்தூர் வாழ்
தீன தயாளனுங் குகனே
தியான மீடேற்ற நின்பதமே
அருள்புரி - ஞான ஷண்முகனே (வான)

நம்பினே னுந்தனை நானே
அன்பு வைத்தாளும் ஸ்ரீமானே
வம்பர்க ளோடுற வாடா
தின்புறச் செய்திடுங் கோனே (நம்)

ஆதர வாரெனக் கையா
அண்டினே னுனை மெய்யா
மாதர்க ளாசையால் நொய்யா
முன்னெனையாள் முரு கையா (ஆத)

வந்தெதிர் சூரனைத் திடவேல்
கொண்டறுத்தே ஜெயித்தவனே
வென்றதை யேநினைந்து நிதம்
புந்தி மகிழ்ந்திடப் புகழும். (வான)

---

இராகம் - இந்துஸ்தானி காப்பி.] [தாளம் - ஏகம்.

அந்தமிகுந்த முகுந்தன் மருகனே
வா வா நீ வா வா வா வா வா (அ)

4

ஆடியுன்புகழ் பாடியெங்குங் கொண்
டாடிநிற்க நீ வா வா (அந்த)

தொகையறு

இந்தாவென வெனக்குனதருள்
தந்தெனை யாட்கொள்வாய்
மைந்தா அரனுக்குபதேசித்த
மாதவமே - யான்மயங்கிடாது

அந்தரர்புகழ் - செந்தின்மாநக
ரந்தனில்வளர் கந்தனே வா வா (அந்த)

தொகையறு

இகமே பெரிதெனப் பலமுறையும்
புகன்று இழிவடையும் - என
தகமே புகுந்ததை யொழித்துன
தடைக்கல மெனப்புகழ்ந் தனுதினமும்

இன்பனேஜெகத் தன்பனே பவத்
துன்புறு திருக்க நீ வா வா. (அந்த)

---

இராகம் - ஆரபி.] [தாளம் - ஆதி.

பல்லவி

அடிபணிந்தேன் அடிபணிந்தேன்
ஐயா நின்றிரு வருளது பெறவுன (அடி)

அநுபல்லவி

வடிவழகி குறமாதிடம் - நன்று
மாவெனனச் சொல்லி வேங்கை மரமதாய் நின்று
நெடிய கிழவனெனவே புகன்றன்று
நினைத்தபடி திருஷண் முகத்துடன் சென்று

நேசி யவளைப் புணர்ந்தாய் - அரனுக்குப
தேசி யெனவுஞ் சிறந்தாய்
நாதனே நவகுண நீதனே சிறுவனெனன்
வேதனை தீர்த்திட வேதினமும் நின. (தடி)

---

இராகம் - இந்துஸ்தானி பியாகு.] [தாளம் - சாப்பு.

வேலவா வுன்னை நம்பினே னிங்கு
வா வா சுந்தரனே
மேருவை யெடுத்த நாரணன் மருகா
கோருவோன் எனக்குக் காரண முருகா
வேண்டினே னுந்தனை நானே - யெனை
யாண்டிடுஞ் செந்தூர்க் கோமானே.

வேதிய ரோதிடும் நீதனே உன்பாதம்
தா தா தம்பிரானே
யாரும் புகழுன தாறு முகமுமீ
ராறுகரமுங் கொண்டாறுதலை சொல்ல
ஏறுமயிலுடன் வாரும் வரமிகத்
தாரும் அரனுக்குக் கூறுஞ் சத்திவடி. (வே)

---

இராகம் - சிந்துபைரவி.] [தாளம் - ஆதி.

பல்லவி

சரவண குகபஜனம் - செய்வோம் மனனம்

அநுபல்லவி

அரஹரா வெனத்துதி அநுதினம் புரிந்து நாம்
வரமது பெற பஜனம் - செய்வோம் மனனம். (சர)

சரணம்

அடிமுடி காணு அரனவர் புதல்வன்
அகிலம் புகழோன் பஜனம்-செய்வோம் மனனம் (சர)
வனக்குற மாதவள் மருவுஞ் சிங்காரன்
நமக்கருள்தர பஜனம் - செய்வோம் மனனம். (சர)

---

இராகம் - கேதாரகௌளம்] [தாளம் - ரூபகம்.

பல்லவி

சோதனை செய்வதே னின்னமுமென்
சோகந்தீர் குகனே ஸ்ரீஷண்முகனே (சோத)

அநுபல்லவி

பாதகமிகச் செய்தே னுயினும்
படிதனிலே வுனதடிநா
ளொருபொழுதாகிலும் நினைந்தும் (சோத)

சரணம்

உனதருளன்றி வேறுலகில் நான்
உய்ந்திடும் வகையிலை யென்றுணர்ந்தேன்
மனதொருமையாம் வழியு மறியேன்
வறுமையெனும் பிணியதனல் - என
தருமை குலைந்திட (சோத)

அற்பநினைவோ டலைந்து திரிந்தேன்
அதனுற் பயனிலையென் றறிந்தேன்
கற்பரா வுனைச் சரணென் றடைந்தேன்
தமியன் விரும்பிடு மருள்தந்
திடுசர வணபவ னே (சோத)

அடிமை யென்றுநா னுனையடைந்தும்
அறிவிலாதவன் போல் நைந்தும்
முடிவிதற் கிலேயோ தெரிந்தும்
முத்தையனே இத்ததினீ
அத்த மெனக் கருளாது. (சோத)

---

இராகம் - சாவேரி.] [தாளம் - ஆதி.

பல்லவி

திருப்பரங் கிரிக்குகை யிருக்கு நம்பெருமான்
திருவடி தொழு மனமே (திரு)

அநுபல்லவி

கருப்புகா தருட்செய் கர்த்தனெனவே ஒரு
கணத்துந் தவறுதவர் குணத்தையே புகன்று (திரு)

சரணம்

ஆக்கல் காத்த லழித்தல் அனைத்தையுங் கைக்கொண்ட
அத்தன வரையன்றி யார்துணை நமக்குண்டு
போக்கும் வரவுமற்ற புனிதன்றனை நினைந்து
போற்றித் தினமும் புகழ்ந் தேற்றி நற்கதிபெற (தி)

அன்னை தந்தையு மற்றும் அனைவருமவரென
அணுவள வேனும் அறிந்திலேயே நெஞ்சே
உன்னையென் செய்வேன் ஒன்று மறிந்திடாத
என்னையுங் கெடுக்காதே நன்மொழி புகன்றேன் (திரு)

பந்தமெனும் வலையிற் பட்டவதி யுறப்
பறப்பதென்ன வந்தோ பயமிக வாகுதே
சிந்தையே வீணாய் நொந்திடா துனக்கொன்று
செப்புவேன் கேளதில் தப்பிதமில்லை புகழ். (திரு)

இராகம் - இந்துஸ்தானி தோடி.] [தாளம் - ரூபகம்.

பல்லவி

தென்பரங் குன்றமர் தேசிகனே
சிந்திக்கு மென்னைக் காவாய் குகனே
திங்க ளணிந்திடும் சங்கர னீன்றநற் (தென்)

அநுபல்லவி

அன்பர்கள் வேண்டிடுந் தபபோதா
அண்டினே னெந்தனை யாளவொண் ணாதா
துன்ப மென்பகை யொழித்திடும் நீதா
சுந்தரியாள் தெய்வ குஞ்சரி நாதா
சந்தத முந்தொழு நண்பர
கந்தனுன் தங்கிய சம்ப்ரம (தென்)

(ஷ தொடர்)

சரவண பவகுகனே வா
கருணமிது ஷண்முகனே வா
அரஹரா வென்றுன் புகழ்பாட
அநுதினமு மானந்தங் கொண்டாட
மரண ஜெனனம் வேருடன்வாட
மைந்தனு னுந்தன் பதந்தனை நாட
மந்திர மொன்றுரை யந்தரா
கந்துயர் வென்றிட வந்தருள்
செல்வனே வா தேவசேனைபதி
சேயனெனக்கார் நீ தானே - கதி (சர)

பல்கோடி காலமும் பயின்றாலும்
பக்தியில் லார்க்கில்லை யுன்னனு கூலம்
வல்லப நீ யுண்மை யானதினாலும்
மங்காமதுன் துதி செய்ய மென்மேலும்

வரமதுதர மகிப னுனது
திருமலரடி பணியு மிதயம்
வாமயி லேறிய மன்னவனே
ஓமெனும் பொருளைச் சொன்னவனே. (சா)

தாமத மேனின்னம் முருகோனே
சர்வதயாபர னான பெம்மானே
காமுறுவ னிவனென் றடியேனை
கைவிட்டிடா துனைக் கண்டிட நானே
கவனித்திடு வினைமுற்றினு
மறுபட்டிட மறையொப்பிய
தென்பரங் குன்றமர் தேசிகனே
சிந்திக்கு மென்னைக் காவாய் குகனே.

---

இந்துஸ்தானி - பியாக்.] [தாளம் - ஆதி.

**கண்ணிகள்.**

திருவாவினன்குடி தேவாஷண்முகா
சேயனென் மனத்துயர் தீர்த்திடுவாய்குகா
முருகாவெனப் புகழ்ந் துருகா தலைந்து நான்
வெறுமாயை யாமவ் விருள்மூடி நின்றேன்.

பிழைகள் முற்றும் பொறுத் தெளியோர்க் கிரங்கிடும்
பெருமா னுனையன்றிப் பேசுதற் கெவருண்டு
மழையில்லாது மா சுறும் பயிர் போல
மைந்தனுன் வாடுதல் மகிப வுனக் கழகோ

இகமோ கமதி லெனைவினை யாட்டி
இழிவடையச் செய்வதா லேழையென் செய்வேன்
பகலவ னெதிர்ப்படும் பனியேபோல் தீவினை
பறந்திடு மேமிகி பாவுனைக் கண்டிடில்

அரனுக் குரைத்தகல் லதிபா அவுணர்கள்
அயர்ந்தே மடிந்ததை யனுதினமு நினைந்து
சார்போற்றிடும் பரஞ் சுடரே வுனைப்பெறுஞ்
சகமே வேண்டுநற் றுணையே யெனக்கருள். (திரு)

---

இராகம் - கானடா.] [தாளம்.

### பல்லவி

குமாரகுருபரனே திருவருட் (குமா)

### அநுபல்லவி

அமரர் தொழுமதி பதி யெனவும் புகழ்
அரனவர் மகிழ பிரணவ முரைசெய் (குமா)

### சரணம்

சமரபுரி யெனும் நகரில் வளர்குக
ஷண்முகா கா வா—சிவ
சரவ ணபவா வெனவு னிருதாள்
தமியனேன் பாவா
லெமதிறைவனென அழுது தொழுதிடும்
எழிலதுந் தாவா
ஏதுமென் மனமே தெரிந்தோய்
எந்தையே தேவா
ஏனினஞ் சோதனை செய்வது
மால்மருகனே கேள்
காணுனையலது வேறொரு பொருளை
காடிடேனது போல்

நீயெனைத் தவருது நித்தமு
மேநினைத்தநெலா மளித்திட
மாய வித்தையெ லாமொழித்திடு
மாமகத்துவ மேமிகத்தரு (குமர)

---

இராகம் - இந்துஸ்தானி காப்பி.] [தாளம் - ஆதி.

மாமயிலேறி நீ வாவடிவேலா
வாவடிவேலா மாதுமை பாலா (மா)

தொகையறு

காமுறுவ னுனை யெக்காலங் காண்பேன்
ஓமெனு நற்பொரு ளுரைத்த உத்தமனே
உனைநிதம் பணிந்தே உளமது கனிந்தே
யுருகிட வரமருள்வாய் வடிவேலா
வாவடி வேலா மாதுமை பாலா

தொகையறு

அந்தோ யான்படுந் துயரம் நீ யறியாதமோ
வந்தாண் டெனையினி யாகிலுமுன் மலரடிசேர்
மதிமிகு தூயா வரமருட் சேயா
மனக்குறை யகற்றிடு வாய்வடி வேலா
வாவடிவேலா மாதுமை பாலா (மாமயி)

---

இராகம் - இந்துஸ்தானி தோடி.] [தாளம் - ஆதி.

பல்லவி

வரவேணும் மாமயில்மீ தேறிவரந் தரவேணும்
இருளகற்றி யுனதரு ளளிக்கவென (வர)

### அநுபல்லவி

தரணிதனில் யான்செய் தவறுக ளறவே
தயவு கூர்ந்திடுமுன் தாள்சரண் குருவே
அரகரா வெனவெ னகமகி ழுறவே
அதிவிரை வுடனிது தந்திரு வுருவே (வர)

### சரணம்

உயர்வாகிய தமிழ் நாடிது வென்றே
உளமகிழ்ந் தாய்ந்துணர்ந் தோர்கள் புகன்றே
மயலா லன்னியர் வழிகளிற் சென்றே
மதிகெடு மானிடத் துயர்கெட இன்றே (வர)

---

இராகம் - இந்துஸ்தானி தோடி.] [தாளம் - ஆதி.

பரனடியே தினம் - பணி மனமே
பணிமனமே நமன் - வருமுனமே - குரு (பர)

### தொகையறா

இருளெனுமிப் பெருங் கடலிலாழ்ந்து மிக்க
இழிவடையா தருளெனும் நற்கதியடைவோம்
அதற்கென் சொற்கேள் - குரு (பர)

### தொகையறா

கல்லாமலும், எல்லாங் கற்றதாகவு மெண்ணி
கருவப்படாது நின்றே
எல்லா நலங்களுந் தரும் - ஆறுமா
முகத்தெந்தையா மென்றே - குரு (பர)

---

இராகம் - பூரிகல்யாணி.] [தாளம் - ரூபகம்.

## பல்லவி

பக்தி மார்க்கமே - கலியில்
பரம சிலாக்யமே (பக்தி)

## அநுபல்லவி

நித்தியமா முயர்தர - முத்தி சேர்க்குமே

## சரணம்

எத்தேசத்தார்களும் எக்குலத்தார்களும்
எக்கால மும்பணிந் தேற்றிடலாம் - எவர்
சித்தம் வைப்பாரோ அவர்க்கரு ளீசனை
தினைப் பொழுது மறவாதகம்
நினைத்தபடி சுகமே பெற - நற் (பக்தி)

---

இராகம் - பியாக்.] [தாளம் ரூபகம்.

## நோட்.

அரனார் திருமகனே
அரி - மால் மருகனே
அம - ரர் புகழ் சுகனே
அக - மீதருள் குகனே - ஆகி (அர)

## துள்ளல்

அகலப்பல வினைகளுமுயர்
சகலக்கலை களுமணுகிட
அதியற்புத கற்பித தற்பரனே வா வா
அவுணர்ச்சிர முற்றறு கொற்றவனே வா வா
அமரர்ப்படைகட்கருணற் றுணையே வா வா (அர)

அங்கிங் கெங்கும் பரவிட
தங்குஞ் சொந்தந் தருமென
அந்தமிருந்திடு செந்தி லமர்ந்தோனே வா
பந்தமகன்றவர் புந்திநி றைந்தோனே வா
எந்தனகங்களி கொண்டிட இன்றே வர் வா (அர)

---

சந்தம்.

வானவர்க்கு முற்றுமத்த னவர்க் குரைத்துமிக்க
மானிலத் துயர்த்துசத்தி வேலெடுத் தெதிர்த்த வற்பர்
மதத்தை யொடுங்க வமர் தொடுத்துர லன்பர்வினை
யறுத்து மகிழ்ந்திடவு நடத்து சிகண்டியநின்
னுமைமற வாமனுமென் னுளுமக லாதுருகு நெறிகாண

ஞானசற் குருக்கள்பக்க மேவடுத்து நற்கருத்தி
னோடுவிட் டெனைத்துலக்கி நானிலத்தி லுற்றபற்று
களைத்தவி ரென்றுமென தகத்தினி னின்றுமுன
தருட்சொல் புகன்றுமத னவஸ்தையை வென்றிடவும்
ஆறுமுக மானபொரு ளேவுனது பாதமலர் பணிவேனே

கானகத்தி லுற்பவித்த மான்விழிப் பெணைச்சுகித்த
காரணத்தை யெப்புவிக்கு மேபரப்பி விட்ட நித்த
முனைத்தொழு மெந்தனக மெதைத்தொழு மெந்தையுரை
நினைத்துடன் வந்துவா மளித்திட சந்ததமு
மாமறைக ளேபுகழு மாதிசிவமே கருணை புரிவாயே

நானெனப் பலத்தவுக்ர ராவணச் சிரத்தை பத்து
மேதுணித்து வெற்றியிற்பெ மானெனப்ர சித்திபெற்று
தபத்தி லுயர்ந்துமிக பாத்து முகந்துபெரு
விடத்தை யடைந்தரவி னடிக்கு முகுந்தன்மரு
காகலைக ளோதியலை மோதுமலை மீதிலகு முருகோனே.

## கலிவிருத்தம்.

நன்ற ருட்பெரு மானுனக் கன்புசெய்
தென்று மின்புறு மந்தரார் தந்துயர்
அன்ற றும்படி வண்டரை வென்றவா
இன்றெ னைக்கலி தீரவந் தாட்கொள்வாய். (௧)

அம்மை யப்பனு சானருள் தெய்வமென்
றும்மை யெப்பவு மோதுந் தபத்தினர்
தம்மை விட்டக லாதிருந் தாலினி
யெம்மை யெப்படி யென்றுவந் தாட்கொள்வாய். (௨)

மாத ராசையி னுலடி யேன்படும்
வாத னைதனை நீயறிந் துமின்னும்
சோத னைசெய்வ தேனென் சிவகுரு
நாத னேகலி யாதெனை யாட்கொள்வாய். (௩)

நற்க திக்கருள் நாயக னீயென்றுன்
பொற்க ழல்பெறப் போற்றிப் புகன்றநூல்
கற்க வுங்கற்ற தன்படி யேவுளம்
நிற்க வுமறி யேனெனை யாட்கொள்வாய். (௪)

உலகை நோக்கிடி லுத்தம னேமனக்
கலவ ரங்கொளக் காரண மிக்குள
பலவி தக்குணத் தழுயர் வாகுநின்
மலர டிக்கெனைச் சேர்த்துவந் தாட்கொள்வாய். (௫)

வெய்ய சூர்விழ விண்ணவர் கள்தொழும்
மெய்ய நின்புக ழென்றும் விளம்பிநா
னுய்ய நாவை வளர்த்தருள் செய்வதோ
டைய னேஅடி யேனையு மாட்கொள்வாய். (௬)

# செந்திலாண்டவன் கீர்த்தனை.

## விருத்தம்

விந்தையா மிப்புவியில் வினையேன் விளைந்ததன்
விபரந் தெரிந்துகொள்ள
வேணுமென் றுவல்கொண் டேனன்றி யுலகாசை
விட்டவனலே னுலகிலோ
முக்திய தவத்தின ருரைத்தநூல் பலவதனை
முறையோடு கற்றல் கேட்டல்
மொழிதலிவை யின்றிமற் றேதோ தெரிந்ததென
மூடனானும் புகன்றேன்
எந்தவித மோயிசையி லக்கண விலக்கியமு
மிதனர்த்தமுந் தெரிகிலேன்
ஏதேனு மனமகிழ்ந் திடலாமெனில் வித்வ
மோரள மென்செய்யனேன்
சுந்தரா வுன்னடிக் கன்புசெயும் விதமதுந்
தூய மனதையு மருளுவாய்
சுரர்போற் றிடுந்திருச் செந்தில்வாழ் நீதனே
தோகைகுஞ் சரிநாதனே. (க)

ஆயாம லிப்புவியி னனுபவங் களையெலா
மாய்ந்தவன் போலு மின்னும்
ஐயநின் திருவரு ளறிந்துமக் கன்புசெயும்
அடியவர்கள் போலு மெண்ணி
ஓயாது பலரிடத் துஞ்சென்று வறுமையா
லுளறியென் வாணாளெலாம்
ஒருபயனு மின்றிவெங் காமமாந் தீயிடை
யுருகவும் புந்தி கெட்டுப்
பேயாய் விழித்துநின் கருணையை வெறுத்துநற்
பெரியோரையும் பழித்துப்
பேதையேன் நாஸ்திகப் பெயரது மெடுக்கவோ
பெரியவிப் புவிபிறந்தேன்

தூயா விதன்கருத் தும்புகன் றினியெனைச்
சுகமுறச் செயவேண்டினேன்
சுரர்போற் றிடுந்திருச் செந்தில்வாழ் நீதனே
தோகைகுஞ் சரிநாதனே. (௨)

மாயமா முலகமிதை யாக்கவுங் காக்கவு
மழிக்கவும் வல்ல னெனவும்
மறைபுகழு நின்கருணை யைப்புகழ்ந் துலகுளோர்
வாழ்த்துவது முண்மையானுற்
சேயனுன் முறையோடு கற்கவுங் கேட்கவுந்
தெரியாத நிலைமை யோடுந்
தேடரிய நின்னையுங் கண்டுகொண் டேனெனச்
சிறிதுமொ ரகந்தை கொண்டேன்
ஆயவும் நீயெனக் கெட்டா திருப்பதை
யறிந்தே னினிப்பிழை பொறுத்
தடியேன் படுந்துய ரகற்றிநின் சேவடிக்
கன்புமறவாத் திறமையும்
தூயனு னேனெனச் சிந்தைமகிழ் கொண்டிடுஞ்
சுகமுமீந் தருள்புரிகுவாய்
சுரர்போற் றிடுந்திருச் செந்தில்வாழ் நீதனே
தோகைகுஞ் சரிநாதனே. (௩)

---

## மங்களம்

இராகம் - காப்பி ] [தாளம் - ஆதி

கண்ணிகள்.

மங்களம் நித்ய ஜெய மங்களமே சுப
மங்களம் நித்ய ஜெய மங்களமே
தங்கும் புகழ்மணச் சந்தவரை வளர்
ஷண்முக நாதனுக்கும் ஜெய மங்களம் - என்றன்
தாய் தெய்வானை வள்ளிக்கும் சுப மங்களம்.

# கீர்த்தனை அட்டவணை.